20th January 1961]

done now and within which time a meeting could not be held comfortably with sufficient audience to listen to speeches made in the meeting?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have no information about this matter. If the hon. Member puts a separate question, I shall answer it.

*Hill allowance*

*** 25 Q.—SRI S. M. ANNAMALAI :** கனம் ரெவினியூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 22-8-1960-ல் 279-ம் எண் கேள்விக்கு அளித்த பதிலையொட்டி ஜவ்வாது மலை போன்ற பிரதேசங்களில் உள்ள உத்தியோகஸ்தர்களுக்கு மலைவாச அலவன்ஸ் கொடுக்கப்படுமா ?

(இ) அப்படியாயின் அதன் விபரமென்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (அ) There is no such proposal under the consideration of Government.

(இ) Does not arise.

SRI S. M. ANNAMALAI : ஜவ்வாது மலைக்கு உள்விவகார அமைச்சர் சென்றுவிட்டு பிறகு மலைவாச அலவன்ஸ் ரத்து செய்யப்பட்டது. அதன் காரணமாக உத்தியோகஸ்தர்கள் அங்கு போக மறுக்கிறார்கள். எல்லா காட்டு அதிகாரிகளும் ஒன்றுகூடி இதைப்பற்றி தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்கள். ஆகையால் மலைவாச அலவன்ஸ் கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : மலைப்பிரதேசத்தில் சுகாதாரக் குறைவு இருக்கக்கூடிய இடங்களில் அலவன்ஸ் கொடுக்கப்பட்டுவந்தது. ஜவ்வாது மலையில் மலேரியா போன்ற பல வியாதிகள் இருந்த காரணத்தால், அன்ஹெல்தி லோக்காலிட்டி அலவன்ஸ் கொடுக்கப்பட்டு வந்தது. இப்போது ஜவ்வாது மலையில் சுகாதார குறைவு இல்லாததோடு சுகாதாரத்திற்காகவே இங்கு போகக்கூடிய நிலைமை ஏற்பட்டிருப்பதால் இந்த அலவன்சுக்கு இப்பொழுது தேவையில்லை.

*Secondary Grade teachers*

*** 26 Q.—SRI S. M. ANNAMALAI :** கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 19—4—1960-ம் தேதி நட்சத்திரக் குறியிட்ட கேள்வி எண் 739-க்கு அளித்த பதிலையொட்டி எத்தனை செகண்டரி கிரேடு ஆசிரியர்கள் ஹையர் கிரேடு சம்பளம் பெற்று வேலை செய்கிறார்கள்?

(இ) அவர்களில் எத்தனை பேர் 4, 3, 2 ஆண்டுகள் சர்வீஸ் உள்ளவர்கள் ?

[20th January 1961

(உ) இவர்களில் 1958-59 ஆண்டில் எத்தனை பேர்களுக்கு உயர் நிலைப் பள்ளிகளில் செகண்டரி கிரேடு உயர்வு கிடைத்தது?

(ஏ) புதிதாக செகண்டரி கிரேடு தேர்ச்சி பெற்ற எத்தனை ஆசிரியர்களுக்கு உயர்நிலைப் பள்ளிகளில் வேலை தரப்பட்டது?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ), (இ) (உ) & (ஏ) : The Government have no information. The time and labour involved in gathering these particulars will not be commensurate with the object in view.

SRI S. M. ANNAMALAI : செகண்டரி கிரேட் உத்தியோகத்தில் மூன்று நான்கு ஆண்டுகள் இருந்தவர்களுக்கு உத்தியோக உயர்வு கொடுக்கவில்லை. மூன்று நான்கு ஆண்டுகள் உயர்நிலைப் பள்ளியில் உத்தியோகத்தில் இருந்தால் அவர்களுக்கு செகண்டரி கிரேட் உயர்வு கொடுக்கவேண்டுமென்று சர்க்கார் உத்திரவு இருந்தும் கூட அவர்களை விட்டுவிட்டு புதிதாக பரிட்சையில் தேறி வந்தவர்களை நேரடியாக உயர்நிலைப் பள்ளிகளில் நியமிக்கிறார்கள். இதை மாற்றியமைக்க சர்க்கார் முன்வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM : குறிப்பாக இம்மாதிரி எங்காவது நடந்திருந்தால் இதைப்பற்றி கனம் அங்கத்தினர் எழுதினால் கவனிக்கச் சொல்கிறேன்.

*Export of tamarind and chillies*

* 27 Q.—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதில் அளிப்பாரா—

1958-ம் ஆண்டிலும், 1960-வது ஆண்டிலும் ஏற்றுமதி ஆன புளி, மிளகாய் எவ்வளவு?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : It is presumed that the hon. Member is referring only to exports from this State to foreign destinations. If so, the quantities so exported are—

| | | |
|---|---|---|
| 1958 | Chillies .. .. .. .. .. | 4,672 tons. |
| | Tamarind .. .. .. .. | 3,002 ,, |
| 1960 | (From January 1960 to September 1960). | |
| | Chillies .. .. .. .. .. | 3,204 tons |
| | Tamarind .. .. .. .. | 250 ,, |

Figures of foreign exports of these commodities from October 1960 onwards are not readily available.

SRI V. K. KOTHANDARAMAN : புளி, மிளகாய் இவைகளை இன்ன அளவுதான் ஏற்றுமதி செய்யவேண்டுமென்ற கட்டுப்பாடு இல்லாத காரணத்தால் பெரிய வியாபாரிகள் ஏராளமாக ஏற்றுமதி செய்வதன் காரணமாக விலைவாசிகள் மேலும் மேலும் அதிகப் பட்டுக்கொண்டே போகிறது என்பதை கனம் அமைச்சர் அவர்கள்